ந. மேற்.

[3] இறையனாரகப்பொருள், சூ. எ - உரை, மேற்.

[4] தொல்காப்பியம், கற்பியல், சூ. ருக.

(பி - ம்.) * 'புள்ளிமான்றேர்' † 'உணர்ந்தாய்'
‡ 'நேமியொடுந் திண்டேர்'
§ 'நலஞ்சாய்' || 'அன்னைகாண்கில்'



ருஅ. வாரித் தரள நகைசெய்து வண்செம்பவள
வாய்மலர்ந்து
சேரிப் பரதர் வலைமுன்றிற் றிரையுலாவு
கடற்சேர்ப்ப
[1] மாரிப் பீரத் தலர்வண்ண
மடவாள்கொள்ளக் கடவுள்வரைந்
* தாரிக்கொடுமை செய்தாரென் றன்னையறியி
னென்செய்கோ.

ருகூ. புலவுத்திரங்கிய துணிக்கிப் பொழிற்றண்டலையிற் புகுந்திருந்து
கலவைச்செம்மன் மணங்கமழத் திரையுலாவு கடற்சேர்ப்ப

பலவுற் †றொருநோய் துணியாத
படர்நோய்மடவா டனியுழப்ப
வலவுற்றிரங்கி யறியானோ யன்னையறியி
னென்செய்கோ. (௫)

வேறு.

௩௦. இளையிருள் பரந்ததுவே யெற்செய்வான் மறைந்தனனே
களைவரும் புலம்புநீர் ! கண்பொழீஇ யுகுத்தனவே
தளையவிழ் மலர்க்குழலாய் தணந்தார்நாட் டுளதாங்கொல் வளைநெகிழ வெரிசிந்தி வந்தவிம் மருண்மாலை. (௬)

௩௧. கதிரவன் மறைந்தனனே காரிருள் பரந்ததுவே யெதிர்மலர் § புரையுண்கணெவ்வநீ ருகுத்தனவே
புதுமதி புரைமுகத்தாய் ‖ போனார்நாட் டுளதாங்கொன்
மதியுமிழ்ந்து கதிர்விழுங்கி வந்தவிம் மருண்மாலை. (௭)

---

௩௪. வாரித்தரளம் - கடல்முத்து.
கடவுள்வரைநது - கடவுளரைவழி.
ட்டு. அறியின் - ஆராய்ந்தறியின்.
௩௯. புலவுற்றிரங்கியது - புலாலுற்றழுற்றுவருந்தியது; துணியால்

இரக்குதலுமாம். நீங்க - புலர்ஞறநீங்க. கலவை - பலவுங்கலந்தது. செம்மல் - பழம்பூ. பலவுற்று - பலநோயிலே பொருந்தி, பல துன்பங்களுமுறுதலால்,

ஒருநோயிற்றுணியவொண்ணுத கிளவையுடைய நோயை மடவாள் தானே யதிர்ந்து அனுபவிக்க; படர் - நினைவு. அலவுறுதலும் இரக்கலும் ஒருவரறியப் படாத நோயை. அன்னையறியாத நோய். நோய் காரணமாக அலவுற்றென்க.

இவைமூன்றும் அலரறிவுறீஇ வரைவுகடாவியவை.

சய. இனையிருள் - இனையவிருள்; விகாரம். களைதற்கரிய வருத்தத்தால் வந்தீர்.

சக. எதிர்மலர் - செவ்விமலர்; எதிர்த்துப் பிணைத்த மலரென்றுமாம்; தோற்றுகின்றமலரென்றுமாம்.

---

1 "மாரிப் பீரத் தலர்சில கொண்டே" குறுந். கஅ.

(பி - ம்.) * 'அரிக்கொடுநோய்செய்தார்'
§ 'புரையுங்கண்' ‖ 'புணர்த்தார்நாட்டு'

† 'ஒருநீர்' ‡ 'கண்பொழி'

## எ.—கானல் வரி.

௬௨. பறவைபாட் டடங்கினவே * பகல்செய்வான் மறைந்தனனே
நிறைநிலா நோய்கூர நெடுங்கணீ ருகுத்தனவே
துறுமல ரவிழ்குழலாய் துறந்தார்நாட் டுளதாங்கொல்
[1] மறவையா யென்னுயிர்மேல் வந்தவிம் மருண்மாலை. (க)

வேறு.

௬௩. கைதை வேலிக் கழிவாய் வந்தெம்
பொய்த லழித்துப் போனா ரொருவர்
பொய்த லழித்துப் போனா ரவர்நம்
மையன் மனம்விட் டகல்வா ரல்லர்.

௬௪. கானல் வேலிக் கழிவாய் வந்து
நீநல் கென்றே நின்றா ரொருவர்
நீநல் கென்றே நின்றா ரவர்நம்
மானேர் நோக்க மறப்பா ரல்லர்.

௬௫. அன்னந் துணையோ டாடக் கண்டு
† நென்ன னோக்கி நின்றா ரொருவர்
† நென்ன னோக்கி நின்றா ரவர்நம்

சஉ. பாட்டடங்கின - ஒலித்தலடங்கின. நிறைநிலா - நிறுத்தலில்லா வாய். நோயகூர-நோயுண்டாகாநிற்க. மறவை - மறத்தையுடைத்தாய். [தலை.

இவை மூன்றும் பொழுதுகண்டு ஆற்றாளாகிய தலைமகள் தோழிக்குரைத்

இவை ஆறும் மயங்குதிணைநிலைவரி..

சரு. பொயதலழித்து - விளையாட்டைமறப்பித்து; "சேர்ப்பே ரீரளை யலவற பார்க்குஞ், சிறுவிளை யாடலு பெருந்துயர மாகிய நோயே" என்றாற்போல.

[2] நற்றிணைப்பாட்டிலும்
மழுங்க, நினைக்குது

சச. என்றேநிற்கை - என்றுசொல்லியேநிற்கை. நம்பார்வையென்றான், வேற்றுமையின்மையால். மானேர்நோக்கம் - மானையொத்தபார்வை.

சடு. பொன்னேர்சுணங்கின் - பொன்தோற்றுகின்ற சுணங்குபோல.

இவைமூன்றும் மெலிதாகச்சொல்லிக் குறைநயப்பித்தல்; ஆற்றுவித்தற் பொருட்டுத் தோழி இயற்பழிக்கத் தலைமகள் இயற்படமொழிந்ததூஉமாம்.

இவை மூன்றும் சாயல்வரி.

சசு. நோயுரையாயென்றது, முற்று. ஆதலால், எம்கானவில் வந்தடை யாதேகோளென்றான். இது காமமிக்க கழிபடர்கிளவி.

---

[1] "மறவை" புறநா. சச. [2] நற்றிணை, கஉக.
(பி - ம்.) * 'பகற்செய்வான்' † 'நின்னோர்நோக்கி நின்றூர்'

வேறு.

சஎ. ஆங்கனம் பாடிய வாயிழை பின்னருங்
காந்தண் மெல்விரற் கைக்கிளை சேர்குரற்
றீந்தொடைச செவ்வழிப் பாலை யிசையெழீஇப்
பாங்கினிற் பாடியோர் பண்ணுப் பெயர்த்தாள்.

வேறு.

சஅ. துளையர் விளரி நொடிதருந் தீம்பாலை
யிளிகிளையிற் கொள்ள விறுத்தாயான் மாலை
யிளிகிளையிற் கொள்ள விறுத்தாய்மன் னீயேற்

கொளேவல்லா யென்னுவி கொள்வாழி
மாலே. (க)

சஐ. பிரிந்தார் பரிந்துரைத்த பேரருளி னீழ

லிருந்தேங்கி வாழ்வா ருயிர்ப்புறத்தாய்
மாலே
யுயிர்ப்புறத்தாய் நீயாகி லுள்ளாற்று
வேந்த
னெயிற்புறத்து வேந்தனே டென்னுதி
மாலே. (உ)

ருo. * பையுணோய் கூரப பகல்செய்வான்
போய்வீழ
வையமோ கண்புதைபப வந்தாய்
மருண்மாலே
மாலேநீ யாயின் மணந்தா ரவராயின்
† ஞாலமோ நல்கூர்ந் ததுவாழி மாலே. (௩)

சஎ. ஆங்கனம்பாடிய -
அவன்பாடினுறபோலப்பாடிய. மெல்விரல் -
மெல்விரலாலே. பண்ணு - பண்ணே.
சஅ. விளரியென்ருர், விளரி இரங்கினர்பாடும்
பண்ணுதலால். இது,
[1] "விளரிப்பண் கண்ணினர் பாணர்' என்று
வந்ததுபோலும்; நெயதறகு இரங்க

லும் இரங்கனிமித்தமும் உரிப்பொருள். விளரி
நொடிதரும்பாலை - விளரிப்பாலை;

நொடிதருதல் - சொல்லுதல். இளி கிளையிற்கோடல்:
நின்றநரம்பிற்கு ஆறு நரம்புபகை; அதி
கூடமென்னுங்குற்றம்; இளிமுதலாகக் கைக்கிளையாறுவதாம்;
இளிக்குக் கைக்கிளை பகையென்றது. தங்கண்மயக்கத்தாலே
பகைநரம்பிலே கைசென்று தடவ. கொளைவல்லாய -
கொள்ளுதலை வல்லாய நீ.

சகூ. ஏங்கி - வருந்தி. உயிர்ப்புறத்தாய -
உயிரைச்சூழ்ந்தாய். உள்ளாற்று

வேந்தன் - நொச்சியான். 'எயிற்புறத்துவேந்தன் -
உழிஞையான். வேந்த

ரோடு - வேந்தறகு.

ருo. இவ்வையத்துள்ளார் கண்புதைப்ப.
நீயெனறதும், அவரென்றதும்

கொடுமைகுறித்து. ஞாலம் நல்கூர்ந்ததென்றாள்,
தன்னோய் எல்லார்க்கும்

ஒக்குமாகத் தனக்குத்தோறறுதலால்; 'தான்சாக உலகு
கவிழும்' என்னும் பழ

மொழிபோல.

இவைமூன்றும் மாலைப்பொழுது கண்டு தலைவி கூறியவை.

[1] பு - வெ. தும்பை. கக. (பி - ம்.) * 'பைதலேனைப்' † 'ஞாலமே'

## எ.—கானல்வரி.

உ௪௯

### வேறு.

௩௧. தீத்துழைஇ வந்தவிச் செல்லன்
மருண்மாலை
* தூக்காது துணிந்தவித் துயரெஞ்சு
கிளவியாற்
பூக்கமழ் கானலிற் † பொய்சூள்
பொறுக்கென்று
மாக்கடற் றெய்வநின் மலரடி
வணங்குதும்.
௩௨. எனக்கேட்டு,
கானல்வரி யான்பாடத்
தானொன்றின்மேன் மனம்வைத்து
[1] மாயப்பொய் பலகூட்டு மாயத்தாள்
பாடினளென

‡ யாழிசைமேல் வைத்துத்த னூழ்வினைவந் துருத்ததாகலி
னுவவுற்ற திங்கண்முகத்தாளைக் கவவுக்கை ஞெகிழ்ந்தனனாய்ப்
பொழுதீங்குக் கழிந்ததாகலி னெழுதுமென் றுடனெழா
தேவலாள ருடன்சூழ்தரக் கோவலன்றான் போனபின்னர்த்
தாதவிழ் மலர்ச்சோலை யோதையாயத் § தொலியவித்துக்
கையற்ற நெஞ்சினளாய் வையத்தி னுள்புக்குக்
காதலனுட னன்றியே ¶ மாதவிதன் மனைபுக்காள்
ஆங்கு,
மாயிரு ஞாலத் தரசு தலைவணக்குஞ்
சூழி யானைச் சுடர்வாட் செம்பியன்
மாலை வெண்குடை கவிப்ப

வாழி மால்வரை ** யகவையா

வெனவே.

---

௫௧. மாலே - மாலையை. தூக்காது - நம்மைவருத்துமென்று கருதாது.

துணிந்தவித்துயரெஞ்சுகிளவியால் - துணிதற்குக்காரணமான நல்ல வார்த்

தையோடே; ஆவது நின்னிற்பிரியேனென்றல். இது, வரைவுநீட்டித்தவிடத்,

துத் தலைமகன் சிறைப்புறத்தானாகக்கூறியது இது கொச்சகம். முகநிலை முரி

களாற் பயந்த வேறுபடுபொருண்மையெல்லாம் தன்னகத்தடக்கி ஒருநெறிப்

படுத்தலாற் கொச்சகமெனப்படும். அது, வெள்ளையானும், அகவலானுமூடி

யும். இவை, மூமமில்வரி

௫௨. என்றிவள் பாடக்கேட்டு[ச் சொல்லுவான்]:—நான் கானல்வரி பாடத்தான் அப்படிப்பாடாதேஎன்னையொழியப்பிறிதொருபொருண்மேல்மனம் வைத்து, மாயஞ்செய்வாளாகலின், இப்படிப் பாடினளென்று.

ஆங்கு, அசை. ஆழிமால்வரை - சக்கரவாளம்; இஃது உள்ளேயகப் படும்படி கவிப்பவென்று புக்காளென்க.

எ.—கானல்வரி முற்றிற்று.

¹ "மாயப்பொய்ம்மொழி" அகநா. கூ.

(பி - ம்.) * 'நாக்காயது தணிந்த துயரெஞ்ச' † 'பொய்ச்சூளுறக்கென' ‡ 'யாழ் மேல்வைத்து' § 'துவியீந்த' ¶ 'மாதவி தன்மனைபுக்கனன்' 'மாயிரு' ** 'அகலயிருக்கென்'

## எட்டாவது.

# வேனிற் காதை.



நெடியோன் குன்றமுந் தொடியோள் பௌவமுந்
தமிழ்வரம் பறுத்த தண்புன னன்னாட்டு
மாட மதுரையும் பீடா ருறந்தையுங்
கலிகெழு வஞ்சியு மொலிபுனற் புகாரு
மரைசுவீற் றிருந்த வுரைசால் சிறப்பின்
மன்னன் மாரன் மகிழ்துணை யாகிய
¹ * வின்னிள வேனில் வந்தன னிவணென
வளங்கெழு பொதியின் மாமுனி பயந்த
விளங்காற் றூதனிசைத்தன னாதலின்
மகர வெல்கொடி மைந்தன் சேனை

புகா றுகோலங் கொள்ளுமென் பதுபோற்
கொடியிடை சோலைக் குயிலோ னென்னும்
படையுள் படுவோன் † பணிமொழி கூற
மடலவிழ் கானற் கடல்விளை யாட்டினுட்
கோவல னூடக் கூடா தேகிய
மாமலர் நெடுங்கண் மாதவி விரும்பி
வானுற நிவந்த மேனிலை மருங்கின்
வேனிற் பள்ளி யேறி மாணிழை

---

க. நெடியோன்குன்றம் - வேங்கடமலை. தொடியோள்பௌவம் - குமரிக்கடல்.
க - உ. இவை தமிழை எல்லைப்படுத்தின நாடு.

ரு - சு. நகரம் நான்கினுமாக வீற்றிருந்த மன்னனாகிய மாரன். எ. வேனில் - வேனிலரசன்; அஃறிணை உயர்திணையாகக்கூறிற்று.

சு. இளங்காற்றாகிய தூதன். குயிலோனுக்கு இசைத்தனன்.

கo. காமன்சேனை - மகளிர்.

கஉ. கொடி - படர்கொடி குயிலோன், உயர்த்துக்கூறிற்று.

கரு. படையுள்படுவோன் - காமன் படைச்சிறுட்பிள்ளை; படைக்கிழவன் சிறுக்கன்; காளமேதி. பணிமொழி - மாருததூதன் பணித்தமொழி.

---

¹ சிலப்பதிகாரம். அ: இள, பிரயோக. சக - உரை, மேற். (பி - ம்.) * 'இன்னிளவேனில் வந்ததிவணென' 'வந்தனளுக' †

## அ—வேனிற்காதை

த. உஉக

1 * தென்கடன் முத்துந் தென்மலைச்

சந்துந்

உ௦. தன்கட ணிறுக்குந் தன்மைய †

வாதலிற்

கொங்கை முன்றிற் குங்கும வளாகத்து

மையறு சிறப்பிற் கையுறை யேந்தி

யதிரா மரபின் யாழ்கை வாங்கி

மதுர கீதம் பாடினன் மயங்கி

உரு. யொன்பான் விருத்தியுட் டலைக்கண்

விருத்தி

நன்பா லமைந்த விருக்கைய ளாகி

---

கக - உ௦. தன்கடனிறுக்குந் தன்மையவாதல் - முத்தும் சந்தும் வேனிற்

காலத்துப் பூண்பனவும் பூசுவனவுமாய்ப்

பயன்படச்செய்தல்.

உக. முனபு குங்குமத்தால் அலங்கரிக்கப்பட்ட
கொங்கைமுன்றிலாகிய
பரப்பு; முலைக்கு முறறம், மார்பெனினுமொக்கும்.

உக - உ. (எ) வேனிலரசனுக்குக் கையுறையாக
வளாகத்தேந்தி; பூண்டும்
பூசியும்மென்றபடி; கையுறை - பாருடம்.

உங. பின்பு அதிராமரபின்யாழ்கை
வாங்கினளென்க; அதிர்தல் - தளங்கு
தல்; அதிராமரபு - கோவைகலங்காத முறைமை.

உச. மதுரகீதம்பாடினள் - மிடற்றுக்
கருவியாலே முந்துறப்பாடிப் பின்பு
யாழ்க்கருவியோடு பாடத்தொடங்கினளென்க.

மதுரகீதம் பாடினண் மயங்கி:
தாரங்குரலான மேற்செம்பாலையென்
னும் பண்ணைக் கண்டத்தாற்பாடி மயங்கி
அப்பண்ணையே யாழினும்பாடின
ளென்றவாறு

இதனாற்போந்த பொருள்:—நிலம் கலம்
கண்டமென்னும் நெறி மூன்றி
னும், "கண்ட மல்லது நிரம்பக் காட்டக், கருவிக்
கின்பங் கொடுப்பதுமது...,
பொருவரு நிலத்தைப் புணர்ப்ப ததுவே" என்னுஞ் செ
சால்லகத்தியச்சூத்திரத்

தானும் முற்படக் கண்டத்தாலே பாடியெனவும் செம்பாலைப்பண்ணை யாழினும்
பாடினளெனவுங்கொள்க.

உரு. ஒன்பான் விருத்தியுட் டலைக்கண் விருத்தியாவது - இருபத்தொரு
கோவைமுதலாக நாலுறகோவையீருகக்கிடந்த கோவைகளுள் ஒன்பான்கோவை
யில் மேற்செம்பாலை தாரமுதலென்பது, 'தலையின தாரஞ் செயயுந் தாரம்' என்
பதனாற்பெற்ரும். ஒன்பான்கோவை : "தொண்டுபடு திவவின் முண்டக நல்
'யாழ்" என ஆசிரியமாலையுள்ளுங் கண்டுகொள்க.

---

[1] தஞ்சைவாணன்கோவை, கூக - உரை, மேற்.

(பி - ம்.) * 'தெண்கடன்' † 'ஆகவின்'

சிலப்பதிகாரம்

* வலக்கைப் பதாகை கோட்டொடு

சேர்த்தி

யிடக்கை நால்விரன் மாடகந் தழீஇச்
செம்பகை யார்ப்பே † கூட மதிர்வே
௩0. வெம்பகை நீக்கும் விரகுளி யறிந்து
பிழையா மரபி னீரேழ் ‡ கோவையை
யுழைமுதற் கைக்கிளை யிறுவாய் கட்டி
யிணைகிளை பகைநட் பென்றிந் நான்கி
னிசைபுணர் குறிநிலை யெய்த நோக்கிக்

---

உ௫ - சூ. ஒன்பான்...........விருக்கைய ளாகி: "ஆதிப்பா.........ஒன் பான் விருத்தி." அவற்றுள், தலைக்கண விருத்தியாவது - "முதற்க ணெதிர்... தோற்றமும்." யாழ்வாசித்தற்குச் சூத்திரம்:—"நல்லிசை மடந்தை......வினய மாட்டுதல் கடனே" என்பது; வினயம் - தேவபாணி.

உள - அ. வலக்கையைப் பதாகையாகக் கோட்டின்மிசை வைத்து இடக் கை நால்விரலளவால் மாடகத்தைத் தழுவியென்றவாறு.

பதாகையாவது - "பெருவிரல் குஞ்சித் தேனைய நான்கு, நிரலே நிமிர்த்தல்

பதாகை யாகும்"

"மாடக மென்பது வுருக்கும் காலைக், கருவிளங் காழ்ப்பினை நால்விரல் கொண்டு,திருவியல் பாலிகை வடிவாக் கடைந்து, சதுரமூன் முகத் துளையிடற்

குரித்தே."

உகூ - ௩0. செம்பகை......அதிர்வு:
இப்பகைநரம்புகள் படாமல் வாசிக்கு

முறைமையறிந்து. இவற்றுள், செம்பகை - நரம்பிற்கலப்பு; ஆர்ப்பு -

நரம்பின் முழக்கம்; கூடம் - பகைநரம்பு; அதிர்வு - கம்பித்தல்.

௯௧ - ௨. பிழையாமரபின்.........கட்டியென்றது - உழைமுதலாகக் கைக்கிளையீறாகப் பண்ணியென்றவாறு. இளி விளரி தாரம் குரல் துத்தம் கைக்கிளை உழையென்று முறையே எழுநரம்பியன்றபின்னர், "கண்ணிய கீழ்மூன் றாகி மேலு, நண்ணல் வேண்டு மீரிரண்டு நரம்பே." "குரலே துத்த மிளியிவை நான்கும், விளரி கைக்கிளை மும்மூன் றாகித், தளராத் தார முழையிவை யீரிரண், டெனவெழு மென்ப வறிந்திசி னோரே."

௯௩ - ௪. இணைகிளை......நோக்கியென்றது: இணை - இரண்டுநரம்பு; "இணையெனப்.........அளவினவென்ப." கிளை - ஐந்துநரம்பு; "கிளையெனப் படுவ.........ஆகுமென்ப." பகையென்றது - ஆறும் மூன்றும்; "நின்ற.........கூடமாகும்." கூடமெனினும் பகையெனினுமொக்கும். நட்பென்றது - நாலாநரம்பு. இங்ஙனம் இசைபுணருங் குறிநிலை எயதநோக்கியென்க.

(பி - ம்.) * 'வலக்கைபதாகை' † 'அதிர்வே கூடம்' ‡ 'கோவைபுமுழை முதற் கைக்கிளை யீரேழ்காட்டியிளை'



௯௫. குரல்வா யிளிவாய்க் * கேட்டன ளன்றியும்
வரன்முறை மருங்கி † னைந்தினு மேழினு
முழைமுத லாகவு முழையீ றாகவுங்
குரன்முத லாகவுங் குரலீ றாகவு

மகநிலை மருதமும் புறநிலை மருதமு
சo. மருகியன் மருதமும் பெருகியன் மருதமு
நால்வகைச் சாதியு நலம்பெற நோக்கி

---

கூரு. குரல்வாய... ......கேட்டனள்:
குரன்முதலாகவெடுத்து இளி
குரலாக வாசித்தாள்.
கேட்டனள் - செவியாலே அளந்தாள்.
(கூசு) வரன்முறைமருங்கிற (கூரு)
கேட்டனளென்க.
கூசு. வரன்முறையாவது - முன்கூறினவகையே
ஐந்தாநரம்பா மும்மை
யின், இளி குரலாக ஏழுநரம்பும் வாசித்தாளென்க.
கூஅ. குரல் குரலாகவும் குரல் தாரமாகவும்
வாசித்தாளென்றவாறு.
கூகூ - சக.
அகநிலைமருதமும்.........நோக்கியென்றது:—
அகநிலை மருதமாவது - "ஒத்த கிழமை
யுயர்குரன் மருதந், துத்தமும் விளரி
யுங் குறைவுபெற னிறையே."
இதன்பாட்டு:—"ஊர்க திண்டே ரூர்தற் கின்னே,
நேர்க பாக நீயா வண்ணம்." நரம்புகளுமாத்திரை
பதினாறு.
"புறநிலை மருதங் குரலுழை கிழமை, துத்தங்
கைக்கிளை குரலா மேனைத்,

தாரம் விளரி யிளிநிறை வாகும்."
இதன்பாட்டு:—":அங்கட் பொயகை யூரன்
கேண்மை, திங்க ளோர்நா ளாகுந் தோழி." நரம்பு பதினாறு. "அருகியன் மருதங் குரல்கிழமை
கைக்கிளை, விளரி யிளிகுர னிறையா
மேனைத், துத்தந் தார மிளியிவை நிறையே."
இதன்பாட்டு:—"வந்தா னூரன்
மென்றோள் வளைய, கன்றாய் போது காணாய் தோழி."
நரம்பு பதினாறு.

"பெருகியன் மருதம் பேணுங் காலை, யகநிலைக்
குரிய நரம்பினை திரட்டி
[1] நிறை ருறை கிழமை
பெறுமென மொழிப." இதன்பாட்டு:—"மல்லூர்.........
நோவவெம்முன், சொல்லற் பாண சொல்லுங் காலை,
யெல்லி வந்த நங்கைக்
கெல்லாஞ், சொல்லுங் காலைச் சொல்லு நீயே."
நரம்பு முப்பத்திரண்டு.

"மன்னு மளிகண் மலர்தேடி மதுவை யுண்டு
வரைதோறும், பன்னு சார
லவையெங்கும் பற்றி யார்க்கும் வகையேபோன், முன்ன
மோசை பல்வாகி முழு
துஞ் வேறாய மிடறொன்றாயத், தென்ன வென்னு
மிசைவளர்த்துப் பண்ணு மாறு தேன்போல."

அகநிலைமருதத்துக்கு நரம்பணியும்படி:—உழை

"தாரத்துட்டோன்று.........தோன் றும்பிறப்பு."

சஉ. மூவகை.........கழிப்பி

யென்றது:—மூவகையியக்கமாவன - வலிவு

மெலிவு சமம்;......"சமமெனப் படுவது தேசிக்கு

வருமே."

சச. புறத்தொரு...... ...மயங்கியென்றது -

புறநிலைமருதப்பண்ணில்

மயங்கியென்றவாறு. அன்றியும், திறத்துள்

புறநீர்மையில் மயங்கியென்

றுரைப்பாரு முளர்.

சரு - சா. திறப்பண்பாடுகின்ற எல்லை அ

ப்பண்ணுக்கு அடைத்தபாட்டின்

'புறத்தொருபாணியென்பது - நால்வகைச்சாதியாகிய

பெரும்பண்களையாக்கி

அதன்வழிப்பிரிந்த திறப்பண்பாடுகின்ற அளவிலே

பிரிவின்கண் வேனிற்பாணி

பாடலினேந்தாள்; பொழுது கண்டு கலங்கினளாதலாலே

காலப்பண்ணுக்குஅமை

பாட்டுமொழிய வேறுசில விரவினவென்க.

மூற்பட மிடற்றிற் பாடியபண்ணே யாழின்மேல்

வைப்பதாகலின், கண்டு

மிடற்றுப்பாடல் சொல்லிற்றிலர்; அது [1] "பருந்து

மதனிழலும் பாட்டு மெழுந

லும்" என்பதனாற்கொள்க.

(எ) வேனிற்காலம் வந்தது; (கo) காமனுக்குப்

பரிக்ரமர்யுள்ளோர் (கக)
போர்க்கோலங் கொள்ளுமென்று காமனுக்குப்
படையழைக்கும் (கஉ) குயிலோ
னென்னும் (கங) படைச்சிறுக்கன் கூறக் (கச)
கானலந்தண்டுறைக்கண் கடலா
டப்போயிருந்துழிக் (கரு) கோவலனூடப் பிரிவாளாயத்
தன்மனையின்கணிருந்த
(கசு) மாதவியும் விரும்பி (கஎ) மாளிகையின் (கஅ)
வேனில்கொண்டாடும் பஞ்
சரத்தினிருந்து (கக) முத்தையும் சந்தனத்தையும் (உக)
வளாகத்துக் (உஉ)
கியுறையாகவேந்தி (உங) இயல்பின் வழாத யாழை
வாங்கி[த் தொழுது கைக்
கொண்டு] வேனிற்காலத்துக் கடைத்த பண்ணை (சஉ)
இயக்கி (உச) மிடற்றி
னூற்பாடுதலும் (சச) பண்முறைமைகெட
மயங்கினளென்று கூட்டுக.
இனி (உஎ) 'வலக்கைப் பதாகை கோட்டொடு
சேர்தி' என்பதுமுதலாக
(சச) 'புறத்தொரு பாணியிற் பூங்கொடி மயங்கி'
என்பதீறுக் முன்னர்ப்பாடிய
ஒன்பான்கோவையின் மேறசெம்பாலைப் பண்ணெழிந்து
பதினாறகோவையுள்ளிய
சகோடயாழை வாங்கி வலக்கையைப் பதாகையாக்கி
அக்கையால் கோடு அசை
யாதபடிபிடித்து இடக்கைநாலுவிரலும் மாடகத்தை

யுறப்பிடித்துச் செம்பகை
யும் ஆர்ப்பும் கூட்டமும் அதிர்வுமாகிய பகைநீங்க
முறைமையிற்பிழையாத நரம்
பிறும் புறிஞலு நரம்பினையும் உழைமுதற் கைக்கிளையிறுவாயாக "மெலிவிற்

[2] சீவகசிந்தாமணி, எகு0.
(பி - மி.) * 'இயக்கிமுறை' † 'தென்றிசைக்காணத்து'

## அ.—வேனிற் காதை.

உஉறு

கூ. சண்பக மாதவி தமாலங் கருமுகை

வெண்பூ * மல்லிகை வேரொடு மிடைந்த
வஞ்செங் கழுநீ ராயிதழ்க் கத்திகை
யெதிர்பூஞ் செவ்வி † யிடைநிலத்
தியாத்த
முதிர்பூந் தாழை முடங்கல்வெண்
டோட்டு
ருo. விரைமலர் வாளியின் வியனில மாண்ட
வொருதனிச் செங்கோ லொருமக

ஞாணையி

னொருமுக ‡ மன்றி யுலகுதொழ திறைஞ்சுந்
திருமுகம் போக்குஞ் செவ்விய ளாகி
§ யலத்தகக் கொழுஞ்சே றளைஇ || யயலது
ருரு. பித்திகைக் கொழுமுகை யாணி

கைக்கொண்டு

மன்னுயி ரெல்லா ¶ மகிழ்துணை புணர்க்கு
மின்னிள வேனி லிளவர சாள
** னந்திப் போதகத் தரும்பிடர்த்

தோன்றிய

கெல்லை மந்தக் குரலே" என்பதனான் உழை குரலான மந்தமும், "வலிவிற் றெல்லை வன்கைக் கிளையே" என்பதனாற ை

கக்கிளையி றுவாயான வலிவும் இணை

இளை பகை நட்பின்வழிகளிலே பொருந்தப்பார்த்துக்

குரல்நரம்பினையும்

யாழிறகு அகப்பட்ட நரம்பாகிய இளிநரம்பையும்

முற்பட ஆராயந்து இசை

யோர்த்து அதன்முறையே அல்லாத நரம்புகளையும்

ஆராயந்து இசையோர்த்துத்

தீதின்மையறிந்து உழைமுதலாகவும்

உழையீறாகவுமென மந்தமுதலாகவும்

மந்தவீறாகவும் குரல்நரம்பு மந்தமானபோது

குரல்நரம்பே முதலுமுடிவுமாக

வும் அகநிலைமருதமும் புறநிலைமருதமும்

அருகியன் மருதமும பெருகியன் மருத
மூமென நால்வகைச் சாதிப்பெரும்பண்கள் (பா) விளரிலம் பெற வலிவு மெலிவு சமமென்னும் மூவகை இயக்கும்முறைமையிலே ஆராய்ந்துபாடிப் பின்னர் மாத்திரைகுறைந்தநிற பண்ணைப்பாடுமேல்வைக்கண் அப்பண்ணை இனிதாகப்பாடி நெகிழ்வுற்ற மனத்தினளாய அயர்ந்தாளெனவுமாம்.

சரு. தமாலம் - பச்சிலை.

சஎ. கத்திகை - தொடைவிசேடம். சஅ.

இடைநிலம் - தொடைநடு.

சஎ - கூ. கத்திகையாகிய பூஞ்செவ்வியில் தொடுத்த தாழைத்தோட்டிலே.

இடையிடையிற் கட்டித்

ருக. ஒருமுகமன்றி - ஒருதிக்கன்றி.

ருஉ - ரு. உலகெலாந்தொழும் திருமுகமென்றது, காமனுணையாதலால்.

ருச. அலத்தகம் - அரத்தகம்; சாதிலிங்கம். சேறு - குங்குமமும் அகி

லும் தேய்த்த குழம்பு. [கொண்டு

ருச - ரு. அத்தோட்டுக்கயலதான பித்திகைமுகையதனை எழுத்தாணியாகக்

ருஎ. இளவரசாளன - நெறிப்பட்டுச்செயயாத ஒருவன.

(பி - ம்.) * 'மல்லிகை விரியலொடு' † 'இடைநிலத்து' ‡ 'அன்றியுமுலகு' § 'அத்தகச்' || 'அல்லது' ¶ 'மகிழ்துணைப் புணர்க்கும்' ** 'அத்தியம்போதகம்'

திங்கட் செல்வனுஞ் செவ்விய னல்லன்
புணர்ந்த மாக்கள் பொழுதிடைப் படுப்பினுந்
தணந்த மாக்க டந்துணை மறப்பினு
நறும்பூ வாளியி னல்லுயிர் கோடலி
னிறும்பூ தன்றிஃ தறிந்தீ மின்னென
வெண்ணெண் கலையு மிசைந்துடன் போகப்
பண்ணுந் திறனும் புறங்கூறு நாவிற்
றளைவா யவிழ்ந்த தனிப்படு காமத்து
விளையா மழலையின் விரித்துரை யெழுதிப்
பசந்த மேனியள் படருறு மாலையின்
* வசந்த மாலையை வருகெனக் கூஉய்த்
தூமலர் மாலையிற் றுணிபொரு ளெல்லாங்
† கோவலற் களித்துக் கொணர்க வீங்கென
மாலை வாங்கிய ‡ வேலரி நெடுங்கண்

கூல மறுகிற் கோவலற் களிப்பத்
திலகமு மளகமுஞ் சிறுகருஞ் சிலேயும்

எ௫. § குவளேயுங் குமிழுங் கொவ்வையுங் கொண்ட
மாதர் வாண்முகத்து மதைஇய நோக்கமொடு

---

௫க. செவ்வியனல்லன் - கோட்டமுடையான்.

௬0. பொழுதிடைப்படுத்தல் - கூடியிருக்கிற இல்லிலே புணர்ந்து ஊடன் முதலாயினவற்றான் விட்டிருத்தல.

௬க. தணத்தல் - நாடிடையிட்டும் காடிடையிட்டும் நீங்குதல்.

௬௨. (பா) நறும்பூ வாளி நல்லுயிர் கோடல்:— நறும்பூவாளி, எழுவாய்.

௬௩. அறிந்தீமின் - அறிமின்.

௬௫. இவையிறைறைப்பழிக்கும். [தன்றுதல்.

௬௬. தளேவாயவிழ்ந்த - தளே கட்டவிழ்ந்துகுலேந்த ; என்றது தன்வரைத்

௬௬ - எ. காமத்தையுடைய மழலே ; விளேயாமழலே - வெளிப்படாமழலே.

முற்றுமழலேயோடெழுதலாவது பேசிப்பேசியெழுதுகை.

(௪௬) தாழைப்பூந்தோட்டிற் (௫௫)

பித்திகைமுகையை எழுத்தாணியாகக்
**கொண்டு** (கூஎ) எழுதினளென்க

கூ௮. படருறுமாலை - நினைவுகூரும் மாலைப்பொழுது

கூகூ. வசந்தமாலை - சேடி.

கூஎ - எக. இத்தன்மையளாய ஊடல்தவிர்ந்து, கோவலனுக்கு ஓலையும்
தூதும் விடுத்தாளென்க.

எஉ. நெடுங்கண் - வசந்தமாலை

---

(பி - ம்.) * 'வயந்தமாலைவருகென' † 'கோவலர்க்குண குழைபுங்குமிழும்'
ர்த்திக்கொணர்க' ‡ 'வேலெதி'

## அ.—வேனிற் காதை.

உஉஅ ?

காதலிற் றேன்றிய கண்கூடு வரியும்
புயல்சுமந்து * வருந்திப் பொழிகதிர்
மதியத்துக்.
கயலுலாய்த் திரிதருங் காமர் செவ்விபிற்
௩0. பாகுபொதி பவளந் திறந்துநிலா வுதவிய

நாகிள முத்தி னகைநலங் காட்டி
¹ வருகென வந்து போகெனப் போகிய
கருநெடுங் கண்ணி காண்வரிக் கோலமு
மந்தி மாலை வந்ததற் கிரங்கிச
சிந்தைநோய் கூருமென் சிறுமை நோக்கிக்
கிளிபுரை கிளவியு மடவன நடையுங்
களிமயிற் சாயலுங் கரந்தன ளாகிச
செருவே னெடுங்கட் சிலதியர் கோலத்
தொருதனி வந்த வுள்வரி யாடலுஞ்
சிலம்புவாய் புலம்பவு மேகலை யார்ப்பவுங்
+ கலம்பெறா நுசுப்பினள் காத
ணோக்கமொடு
திறத்துவே றாயவென் சிறுமை ‡
நோக்கியும்
புறத்துநின் றாடிய புன்புற வரியுங்
கோதையுங் குழலுந் தாதுசே ரளகமு
மொருகாழ் § முத்தமுந் திருமுலைத் தடமு
மின்னிடை || வருத்த நன்னுத றோன்றிச
சிறுகுறுந் தொழிலியர் மறுமொழி
யுய்ப்பப்

---

௨௨. கண்கூடுவரி - பிரதமதேசததில் நடித்தநடிபபு; இஃது ஒருவர் கூட்ட
வன்றித் தானேவநது நிற்குநிலைமை

அஉ - ௬. அழைக்கவந்து போகச்சொல்லிப்
போகியநடம்;

பலகாலுமவந்து காணுமபடி நடித்தநடம

அரு - ௯. வருத்தமறிந்து தன்வடிவுகரந்து,
சிலதியர்வடிவுடன் தமரறி
யாமல்வந்து நடித்தநடிப்பு. உள்வரி - வடிவுமறைத்தல்.

௯உ. திறத்துவேறாகிய சிறுமை: இவள் நீக்கத்து
தென்க.

ஆற்றாமை கூறின

௯௩. புறவரி - இவனுடனணையாது
வாயிற்புறம்பேநின்றாடிய நடிப்பு.

௯௪. தோன்றி - வந்தணுகாதே
புறவாயிலிலேநின்று.

௯எ. சிறுகுறுந்தொழிலியர் - சிலதியர்.
மறுமொழியுய்ப்ப - மறுமாற்றம்
சொல்ல.

---

[1] அஉ - ௬. தக்கயாகப்பரணி, ௨௬0 - உரை, மேற்.
(பி - ம்.) * 'வருந்தியபொழி' †
§ 'முத்தமுஞ்மசமுமுலே' || 'வருந்தி'

'கலம்பொறுதுசுட்பு' ‡ 'நோக்கிப்புறத் து

புணர்ச்சியுட் பொதிந்த கலாந்தரு *
கிளவியி
னிருபுற மொழிப்பொருள் கேட்டன
ளாகித்
தளர்ந்த சாயற் றகைமென் கூந்தல்
கிளர்ந்துவே ருகிய கிளர்வரிக் கோலமும்
பிரிந்துறை † காலத்துப் பரிந்தன ளாகி
யென்னுறு ‡ கிளைகட்குத் தன்னுறு
துயரந்
தேர்ந்துதேர்ந் துரைத்த தேர்சிவரி
யன்றியும்
§ வண்டலர் கோதை மாலையுண்
மயங்கிக்
கண்டவர்க் குரைத்த காட்சி || வரியு
மடுத்தடுத் தவர்முன் மயங்கிய மயக்க
மெடுத்தவர் தீர்த்த வெடுத்துக்கோள்
வரியு
மாடன் மகளே யாதலி னயிழை

ககா பாடுபெற் றனவப் பைங்தொடி
தனக்கென '
வணித்தோட்டுத் திருமுகத் தாயிழை
யெழுதிய
மணித்தோட்டுத் திருமுக மறுத்ததற்
கிரங்கி
வாடிய வுள்ளத்து வசந்த ¶ மாலை

---

கூஅ - கoக. புணர்ச்சி நிமித்தமாகப் புலந்து தன்
சிலதியர்க்குச் சொல்லி
விட்ட வார்த்தையைக்கேட்டு அப்படியன்றிப் புலந்து
சொன்னேனுகக்கொண்டு
தான் நடித்துப்போன நடம்.

கoரு - ௪. தேர்ச்சிவரியாவது-தன்
னுறவுமுறையார்க்குத் தன்விதனங்களை
விசாரித்துச்சொன்ன நடம்.

கoசு. கண்டவர்க்கு-கண்டவரெல்லார்க்கும்,
உரைத்தல்-தன்விதனத்தைச்
சொல்லுதல். காட்சிவரியாவது - தன்வருத்தம்
பலருங்காணும்படி நடித்த நடம்
கoஅ. எடுத்துக்கோள்வரியாவது -

கையறவெய்திவீழ்ந்தாளாக வீழ்ந்து
பிறர் எடுத்துக்கொள்ளும்படி நடித்த நடம்.

எஎ - கo௮. "வரியெனப் படுவது.
......நெறித்தே", "அவற்றுள், கண்
கூடென்பது........தன்மைத் தென்ப", '
'காண்வரியென்பது.. ...தன்மைய
தாகும்", "உள்வரியென்பது... . ...ஆடுதற்குரித்தே",
"புறவரி யென்பது...
......விடைபெறு
வதுவே","கிளர்வரியென்பது.........நிற்பதுவே", "தேர்ச்சி
யென்பது... ...தேர்ச்சிவரி யாகும்", "காட்சி
யெனபது.........பரிந்துநிற்
பதுவே", "எடுத்துக் கோளே... ....எடுத்துக்கோளே."

வரியென்றது, நடத்தை.

கoக. (ப1) மகளே: ஐ, இடைச்சொல்.
ஆயிழையென்றது, கூனியை;
இவள் வசந்தமாலை ; அண்மைவிளி.

‖

(பி - ம்.) *'கிளவியிருப்பறம்' † 'காலத்தும்' ‡ 'கிளைஞர்க்குத்' § 'வரியன்றியுமடுத்தடுத்து' ¶ 'மாலையுந்தோடலர்'

உ௩௬

தோடலர் கோதைக்குத் துணிந்துசென் றுரைப்ப.

கக௱ [1] மாலை வாரா ராயினு மாணிழை
காலைகாண் குவமெனக் கையறு நெஞ்சமொடு
பூமல ரமளிமிசைப் பொருந்தா தவிந்தனண்
மாமலர் நெடுங்கண் மாதவி தானென்.

வெண்பா.

க. செந்தா மரைவிரியத் தேமாங் கொழுந்தொழுக
* மைந்தா ரசோக மடலவிழக்—கொந்தா
ரிளவேனல் வந்ததா லென்னுங்கொ லின்று
வளவேனற் கண்ணி மனம்.

உ. ஊடினீ [2] ரெல்லா முருவிலான் றன்னாணை
† கூடுமி னென்று குயில்சாற்ற—நீடிய

வேனற்பா ணிக்கலந்தாண் மென்பூந்
திருமுகத்தைக்
கானற்பா ணிக்கலநதாய் காண்.

---

கசள பொருந்தாது - கூடாது.

(கஅ) வேனிற்பள்ளியேறி (உக) யாழ் கைவாங்கி (உச) மயங்கி (சஅ)

மாலையின் நடுவுவைத்துத் தொடுத்த (சக) தாழைப்பூந்தோட்டிலே (கூள) எழுதி

(கூக) அம்மாலையை வசந்தமாலைக்கொடுத்து (எக) அவனைக்கொண்டுவருக

வென, (எஉ) அவள் (எக) சென்று கொடுத்துழி, கோவலன் வரியைப்பராட்டி

இப்டண் (கக) பாடுபெற்றனவென்று சொல்லக்கேட்டு (ககஉ) இரங்கிச் (ககச)

சென்றுரைப்ப (ககரு) வாராராயினும் (ககசு) காலைகாண்போமெனச் செயலற்

றுப் (ககள) பாயலிற பொருந்தாது வதிந்தனளெனக் கூட்டுக.

---

க. ஞமந்து - அழகு. கொத்து, கொநதென, மெலிந்தது. இது, கூனி ஓலைகொண்டு செல்லுகின்றகாலத்துத் தன்னுள்ளே சொல்லி யது; கோவலனுக்கு அவள் சொல்லியதூஉமாம்.

ராற் குமரியென்பதாயிற்று. ஆகவே
தென்பாற்கண்ணதோர் ஆற்றிற்குப் பெய
ராம். ஆனால், நெடியோன்குன்றமும் தொடியோள்
நதியுமென்னாது பௌவமு
மென்றது என்னையெனின், முதலூழியிறுதிக்கண் தென்மதுரையகத்துத் தலைச்
சங்கத்து அகத்தியனாரும் இறையனாரும் குமரவேளும் * முரஞ்சியூர் முடிநாக
ராயரும் நிதியின்கிழவனும் என்றிவருள்ளிட்ட நாலாயிரத்து நானூற்று நாற்
பத்தொன்பதின்மர் எண்ணிறந்த பரிபாடலும்
முதுநாரையும் முதுகுருகும்
களரியாவிரையுமுள்ளிட்டவற்றைப் புனைந்து
தெரிந்து நாலாயிரத்து நா
னூற்று நாற்பதிற்றியாண்டு [1] இரீயினார்
காய்சினவழுதிமுதற் கடுங்கோனீறா
யுள்ளார் எண்பத்தொன்பதின்மர்; அவருட்
கவியரங்கேறினார் எழுவர் பாண்
டியருள் ஒருவன் சயமாகீர்த்தியனாகிய
நிலந்தருதிருவிற்பாண்டியன் தொல்
காப்பியம் புலப்படுத்து இரீயினான். அக்காலத்து
அவர் நாட்டுத் தென்பாலி முகத்திற்கு
வடவெல்லையாகிய பஃறுளியென்னுமாற்றிற்கும்
குமரியென்னு
மாற்றிற்குமிடையே எழுநூற்றுக் காவதவாறும்
இவற்றின் நீர்மலிவானென
மலிந்த ஏழ்தெங்கநாடும் ஏழ்மதுரைநாடும்
ஏழ்முன்பாலைநாடும் ஏழ்பின்பாலை நாடும்

ஏழ்தன்றநாடும் ஏழ்குணகாரைநாடும்
ஏழ்குறும்பனைநாடுமென்னும் இந்த
நாற்பத்தொன்பதுநாடும் குமரி
கொல்லமுதலிய பன்மலைநாடும் காடும்
நதியும் பதியும் தட
நீர்க்குமரி வடபெருங்கோட்டின்காறும் கடல்கொண்டொழி
தலாற் குமரியாகிய பௌவமெனறாரென றுணர்க.
இஃது என்னை பெறுமா
றெனின், [1] "வடிவே லெறிந்த வான்பகை பொறாது,
பஃறுளி யாற்றுடன்
பன்மலை யடுக்கத்துக், குமரிக் கோடுங் கொடுங்கடல்
கொள்ள" என்பதனுனும், க்ணக்காயனார்மகனார்
நக்கீரனாருரைத்த இறையனார்பொருளுரையானும், உரை
யாசிரியராகிய இளம்பூரணவடிகள் முகவுரையானும்
பிறவாற்றானும்பெறுதும்.
அஃது அற்றாக, வடக்கின்கண் வேங்கடமலை
தெற்கின்கட் குமரிக்கடலெனக்
குறியாற் கூறினவர் கீழ்பால் மேல்பாற்கு
எல்லைகூறாதது என்னையோவெனின்,
நெடுந்திசையாகிய வடபாற்கெல்லை குன்றமென்றும்
தென்பாற்கெல்லை குமரிப்
பௌவமென்றுங் கூறினமையான் ஒழிந்ததிசைகட்கு
ஒழிந்த பௌவும் எல்லை
யென்பதாயிற்று; என்னை ? "வேங்கடங் குமரி
தீம்புனற் பௌவமென், றிந் .
நான் கெல்லை தமிழது வழக்கே" என்றார் சிகண்டியா

நுமாகலின். அன்றியும்
[2] வடதிசைக்கண் வடுகொழிந்த திரிபுடைமொழி பலவுளவாகலான் மலையெல்லை
கூறி ஒழிந்த திசைமூன்றிற்கும் திரிபின்மையாற் கடலெல்லைகூறினுரெனினு
மமையும.

(இ - ள்.) வடக்கின்கண் வேங்கடமலையும் தெற்கின்கட் குமரிக்கடலும்
கிழக்கின்கண்ணும் மேற்கின்கண்ணும் ஒழிந்த கடல்களுமே தமிழ்நாட்டிற்கு
எல்லையென்று கூறுபடுத்த மூவேந்தருடைய குளிர்ந்த புனலையுடைய நல்ல
நாட்டிடத்தென்க.

---

[1] இரீயினர், பிறவினை. [2] சிலப்பதிகாரம், கக: கஅ - உ௦. [3] "வடதிசை மருங்கின்
வடுகு வரம்பாக." (பி - ம்.) * 'மூரிஞ்சியூர்'

அ.—வேனிற்காலத.

திவணென

இந்த நகரம் நான்கிற்கும் மாடமுதலிய நான்கும் அடை.

(இ - ள்.) மதுரையும் உறந்தையும் வஞ்சியும் புகாருமென்னும் நான்கு நகரிற்கும் அரசனாய்த் தன் தேரும் புரவியும் யானையும் சேனையும் இச்சொன்ன முறையே வைத்து வீற்றிருந்த புகழமைந்த சிறப்பினையுடைய மாரனாகிய மன்னனுக்கு மனமகிழ்ந்துணையாகிய இன்பத்தைத்தரும் இளவேனிலென்னும்

இளவரசன் இப்பொழுது இங்கே வந்துவிட்டானென்றென்க.

வந்தது, வருமென்னும் எதிர்காலத்தை இறந்தகாலத்தாற கூறினார்;

விரைவு; என்னை? [1] "வாராக் காலத்து நிகழுங் காலத்து, மோராங்கு வரூஉம்

வினைச்சொற் கிளவி, யிறந்த காலத்துக் குறிப்பொடு கிளத்தல், விரைந்த

பொருள வென்மனார் புலவர்" என்றாராகலின். இஃது என்சொல்லியவாறோ?

வெனின் காமனுக்குத் தேர் தென்றலும், புரவி கிள்ளையும், யானை அந்தியும், சேனை மகளிருமாதலால் தேர் தென்னர்காவலும், புரவி [2] கிள்ளிகாவலும், யானை

சேரமான்காவலுமாக்கித் தானும், தன் சேனையும் புகாரில் வீற்றிருந்தானென்பது.

கருத்து அஃது, [3] "உருவி லாள னொருபெருஞ் சேனை, யிலகம ராட்டி யெதிர்

நின்று விலக்கி" என்பதனானும், * "மகர வெல்கொடி
மைந்தன் சேனை, புகரறு
கோலங் கொள்ளுமென் பதுபோல்" என
மேற்கூறுதலானுமுணர்க, "திண்பரித்
தென்றலந் தேருந் தார்புனை, வண்பரிக் கிள்ளையு மாலை
யானையுங்; கண்கடைப்
படுகோலக் காமர் சேனையு, மெண்படப் புகுந்தன வி ரதி
காந்தனே" என்றார்
பிறருமெனக்கொள்க.

அ - கரு. வளங்கெழு

பொதியில்........பணிமொழி கூற

(இ - ள்.) வளமைபொருந்திய பொதியத்து
முனிபயந்த இளங்காலாகிய
தூதன் குயிலோனுக்கு இசைத்தனனாதலானே
காமன்சேனையாயுள்ளாரெல்லாம்
கோலங்கொண்மினென்னும் பொருள்பயப்பப்
பூங்கொடிகண்மிடைந்த சோலை
யென்னும் பாசறையிலிருக்கும் அக்குயிலோனென்னும்
சின்னமூதி காற்றூதன் தனக்குப் பணித்தமொழியைச்
சேனைக்குக் கூறவென்க.

இளங்காற்றூதன - தென்றலாகியதூதன்;
இளையகாறறூதனென்று
மாயிற்று; * காற்றூதன் - ஒட்டன் சேனை - மகளிர்.
கோலங்கோடல் - அக்கா

லத்திற்கேற்பனவுடுத்து முடித்துப் பூசிப் பூணுதல்; போர்க்கோலமென்றுமா

யிற்று. படையுள்படுவோன - சின்னமூதி; "சேனையுள் படுநரை யானையி

னேவி" என்றா கதையிலும், பணிமொழி - காறறா தன் பணித்தமொழி. பணித்

'தல் - அருளிச்செய்தல்; திசைச்சொல்; [6] "மண்டலமேபணி யாய்" என்பது

போல; பணிவிடையென்னும் வழக்குமது.

கச - அ. மடலவிழ் கானல்........பள்ளியேறி

---

[3] தொல்காப்பியம், வினையியல், சூ. சச. [4] சிலப். அ: கO - கக.

[5] இன்வி - சோழன். [5] ,, உக: உ௵O. [3] சிலப்பதிகாரம், ௵: உஉச-௵.

[6] திருச்சிற்றம். கஎஎ.



(இ - ள்.) கடலாட்டாகிய விளையாட்டின்கண்ணே மடலவிழுங்கான லிடத்துக் கோவலனோடு ஊடுதலாலே தமியளாயத் தன்மனையிற்புக்க கரிய மலர்போலும் நெடியகண்ணையுடைய மாதவி அதற்குவிரும்பிப்

பருவத்திற்குப் பொருந்த வானிலேயுத்வுயர்ந்த மேனிலையில் ஒருபக்கத்து நிலாமுற்றத்தே யேறியென்க.

விளையாட்டினுளென்றார், விளையாட்டுப்பூசல் வினையாயிற்றென்னும் வழக்குப்பற்றி.

கஅ - உஉ.

மாணிழை..........கையுறை யேந்தி

(இ - ள்.) அந்த மாட்சிமைப்பட்ட இழையினையுடையாள் முத்தும் சந்தும் அக்காலத்திற்கு எப்பொழுதும் தான் கடனாக இடக்கடவ திறையாகலான் முன்சென்ற பின்பனிக்காலத்திற் குங்குமத்தால் அலங்கரிக்கப்பட்ட முலைமுற்ற மாகிய பரப்பிலே அம்முத்தையும் சந்தையும் கையுறையாக ஏந்தியென்க

கையுறை - காணிக்கை. ஏந்தியெனவே பூண்டும் பூசியுமென்பதாயிற்று. காணிக்கைகாட்டுவார் காண்பார்முன்றிலிற்கொணர்ந்து காட்டுவாராகலிற் கொங்கைமுன்றிலில் ஏந்தியென்றார். முலைக்குமுற்றம் மார்பு.

உரு - சு. அதிரா மரபின்...... .இருக்கைய ளாகி

(இ - ள்.) மாதவி பணிமொழிகூற, அதற்குவிரும்பி ஏறிப் பூண்டு பூசி ஒன்பது வகைப்பட்ட இருப்பினுள் முதற்கண்ணதாகிய பதுமாசனமென்னும் ஆசனத்திருந்து கோல்வகல்லங்காமரபினையுடைய யாழைக் கையில்வாங்கிக்

கண் . டத்தால் முந்துற மதுரகீதமாகப்பாடி அதுமயங்கிக் கலத்தாற் பாடத் தொடங் கினவளென்க.

இதனுள் விருத்தியென்பது இருப்பு; ஓவியநூலுள் நிற்றல் இருத்தல் கிடத்தல் இயங்குதலென்னும் இவற்றினவிகற்பங்கள் பலவுள. அவற்றுள் இருத்தல்:—திரிதரவுடையனவும்திரிதரவில்லனவுமென இருபகுதிய. அவற்றுள் திரிதரவுடையன:— யானை தேர் புரவி பூனைமுதலியன்; திரிதரவில்லன ஒன்பது வகைப்படும். அவை:—பதுமுகம், உற்கட்டிதம், ஒப்படியிருக்கை, சம்புடம், அயமுகம், சுவத்திகம், தனிப்புடம், மண்டிலம், ஏகபாதம் எனவிவை; என்னை? "பதுமுக முற்கட் டிதமே யொப்படி, யிருக்கை சம்புட மயமுகஞ் சுவத்திகந், தனிப்புட மண்டில மேக பாத, முளப்பட வொன்பது மாகுந், திரிதர வில்லா விருக்கை யென்ப" என்றாராகலானும், [1] "பன்னுள் கழிந்த பின்னர் முன்னு, ளெண்மெயப் பாட்டினு ளிரக்க மெயங்கிநீஇ, யொண்வினை யோவியர் கண்ணிய விருத்தியுட்,
தாரணங் கெய்தி"

டலையத னும்பர்த் தான்குறிக் கொண்ட, பாவை நோக்கத் எனப் பெருங்கதையுட் கூறினமையானுங்கொள்க.

இனி நாடகநூலார் இவ்விருப்பை ஐம்பதென விரிவரையறையாற்கூறித் தொகைவரையறைகூறுவார்,அவறறை ஒன்பதினடக்கினரெனவுணர்க;என்னை? "ஆதிப்பா விருத்தி யைம்பதிற் புலவோ, ரோதிக் கொண்டன ரொன்பான் விருத்தி" என்றாராகலின்.

---

[1] பெருங்கதை, தருமதைசம்பத்தம், சச - அ.

அவற்றுள், தலைக்கண்விருத்தியாவது - பதுமாசனம். இதனாற்சொல்லியது, அதிராமரபினையுடைய யாழைக் கையின்வாங்கிப் பதுமாசனமாகவிருந்தவள் தனக்கு நாயகனின்மையால் தியாதநாயகனை மானதத்தானோக்கி எதிர்முகமாகவிருந்து வாசித்தலைக் கருதினாளென்பது. என்னை? "முதற்க ணெதிர்முக நோக்கி நயத்தக, வொருவ னாகிய தோற்றமும்" என்றாராகலின்.

யாழ்வாசிக்குமுறைமையை, "நல்லிசை மடந்தை நல்லெழில் காட்டி, யல்லியம் பங்கயத் தயனினிது படைத்த, தெய்வஞ் சான்ற தீஞ்சுவை நல்யாழ்,
மெய்பெற வணங்கி மேலொடு கீழ்புணர்த், திருகையின் வாங்கி யிடவயி னிரீஇ,
மருவிய வினய மாட்டுதல் கடனே" என்பதனானறிக; வினயம் - தேவபாணி.

௨௭ - அ.

வலக்கைப் பதாகை.........மாடகந் தழீஇ

(இ - ள்.) வலக்கையைப் பதாகையாகக் கோட்டின்மிசையேவைத்து இடக்கைநால்விரலான் மாடகத்தைத் தழுவியென்க.

பதாகைக்கையாவது பெருவிரல்குஞ்சித்து ஒழிந்த விரலெல்லாம் நிமிர்த்
தல்; என்னை? "எல்லா விரலு நிமிர்த்திடை யின்றிப், பெருவிரல் குஞ்சித்தல்
பதாகை யாகும்" என்றாராகலின். மாடகம் - வீக்குங்கருவி. அது முன்னர்
[1] ஆணியென்பதனுட்கூறினும்.

## உக - ரு௦. செம்பகை

யார்ப்பே.........விரக்ளி யறிந்து

செம்பகை ஆர்ப்பு கூடம் அதிர்வென்னுநான்கினும்
செம்பகை தாழ்ந்த
விசை = இன்பமின்றியிசைத்தல் ; ஆர்ப்பு
மாத்திரையிறந்த சுருதி = ஓங்க
விசைத்தல் ; கூடம் இசைநிறவாதது = தன் பகையாகிய
ஆறுநரம்பினிசையிற்
குன்றித் தன்னோசைமழுங்கல்; அதிர்வு
நரம்பைச்சிதறவுந்தலெனக்கொள்க.

இதனை, "இன்னிசை வழிய தன்றி யிசைத்தல்செம்
பகைய தாகுஞ், சொன்ன
மாத் திரையி னோங்க விசைத்திடுஞ் சுருதி யார்ப்பே,
மன்னிய விசைவ ராது
மழுங்குதல் கூட மாகு, நன்னுதால் சிதற வுந்த லதிர்வென
பதனுற்கொள்க ; இது பஞ்சபாரதீயம்.

நாட்டி னரே" என்

அன்றி, [a] "செம்பகை யென்பது பண்ணோ டொரா
, வின்பமி லோசை
யெனமனுர் புலவர்", "ஆர்ப்பெனப் படுவ தளவிறந்
திசைக்கும்", "கூடமென்

இக்குரன்முதலேழினும் மூற்றேன்றியது தாரம்;
"தாரத்துட் டோன்று
முழையுழை யுட்டோன்று, மோருங் குரல்குரலி
னுட்டோன்றிச் - சேருமிளி,
யுட்டோன்றுந் துததததுட் டோன்றும் விளரியுட்,
கைக்கிளை தோன்றும்
பிறப்பு" என்பதனல், தாரத்தில முதறபிறப்பதாகிய
உழைகுரலாயக் கைக்கிளை
தாரமாகிய கோடிப்பாலை முதறபிறக்கக் கட்டியெனக.
௩௩ - ௪. இணைகிளை.........எய்த நோக்கி
இணை கிளை பகை நட்பென்றுசொல்லப்பட்ட நான்
கினும்; இணை-இரண்டு
நரம்பு; என்னை? "இணையெனப் படுவ கீழு மேலு,
மணையத் தோன்று மளவின
வென்ப."
கிளை-ஐநதுநரமபு; என்னை? "கிளையெனப படுவ
கிளக்குங் காலைக், குரலே
யிளியே துத்தம் விளரி, கைக்கிளை யெனவைந் தாகு
மெனப."
பகை - ஆறும்மூனறும்; "நின்ற நரம்பிற் காறு
மூனறுஞ், சென்றுபெற
நிற்பது கூடமாகும்." கூடமெனினும்
பகையெனினுமொக்கும்.
நட்பு - * நாலுநரமபு...... . ...
(இ - ள்.) இந்நான்கனுள்
இசைபுணருங்குறிநிலையைப் பொருந்தநோக்கி . யென்க.

௫௫. குரல்வா யிளிவாய்க் கேட்டனள—(இ
- ள்.) குரல்முதலாக .
எடுத்து இளிகுரலாக வாசித்தாளென்க.

இனி வட்டப்பாலை இடமுறைத்திரிபு கூறுகின்றார்:
"குன்றாக் குரற்பாதி தாரத்தி லொன்று, நடுவ
ணிணைகிளை யாக்கி - கொடியிடையாய, தாரத்தி
லொன்று விளரிமே லேறடவர், நேரத் ததுகுரலா
கின்று." என் - னின்,
உழை குரலாகிய கோடிப்பாலைகிறக
இடமுறைதிரியுமிடத்துக் குரல்குரலாயது
செம்பாலை; இதனிலே குரலிறபாதியும்
தாரததிலொன்றும் இரண்டின் அந்
தரத்திலே கிளையாக்கித் தாரததிலே கின்ற ஓரலகை
விளரியின்மேலேறட விளரி
குரலாயப் படுமலைப்பாலையாம். இம்முறையே துத்தம்
குரலாயது செவ்வழிப்
பாலையாம். † இளி குரலாயது அரும்பாலையாம்.
கைக்கிளை குரலாயது மேற்
செம்பாலையாம். தாரம் குரலாயது விளரிபபாலையாம்.
என அந்தரமைந்து

நீக்கி உறழ்ந்து கண்டுகொள்க. இவ்விடத்தில் தார நரம்பின் அந்தரக்கோலைத்

தாரமென்றது "தன்னமுந் தாரமுந தன்வழிப்படர" எனனுஞ்சூத்திரவிதியா

னென்க. இவ்வேழு பெரும்பாலையினையும் முதலடுத்து நூற்றுமூன்று பண்ணும்

பிறக்கும்; அவற்றுள் செம்பாலையுட்பிறக்கும் பண்கள்:—பாலையாழ், நாகராகம்,

ஆகரி, தோடி, கௌடி, காந்தாரம், செந்துருத்தி, உதயகிரியெனவிவை.

பிறவும் விரிப்பின் உரைபெருகுமாதலின அவறறை வந்தவழிக்கண்டுகொள்க.

"நாற்பெரும் பண்ணுஞ் சாதி நான்கும், பாறபடு திறனும் பட.. ணெனப் படுமே"

என்றார்.

---

(பி - ம்.) * 'தாலா நரம்பு; இளி ஐந்தா நரம்பு, பகை ஆறு நரம்பு.' † 'விளரிகுரலாயது.'

அ.—வேனிற்க

ாண்த. உரை

[illegible] - ௬. அன்றியும்........ஏழினும்

(இ - ள்.) அங்ஙனம் இளிகுரலாக
வாசித்தலேயன்றி முற்கூறியவகையே
ஐந்து நரம்பானமுறைமையின் ஏழுநரம்பும்
வாசித்தாளென்றவாறு.

௩௭ - ௯௧. உழைமுத
லாகவும்........நலம்பெற நோக்கி
உழை குரன்முதல் உழை குரலீறுவுள்ள
நான்கிற்கும் அகநிலைமருதமுதற்
பெருகியன்மருதம் ஈறுவுள்ளநான்கும் நிரனிறை.

(இ - ள்.) முன் அணிந்தமுறையே
உழைகுரலாய கோடிப்பாலை அகநிலை
மருதமாகவும், உழைகுரலாயக் கைக்கிளைகுரலாய மே
மற்செம்பாலை புறநிலைமருத
மாகவும், குரல்குரலாய செம்பாலை
அருகியன்மருதமாகவும், குரல்தாரமாய்த்
தாரங்குரலாயவிளரிப்பாலை பெருகியன்மருதமாகவும்
இச்சொல்லப்பட்டசாதிப்
பெரும்பண்ணையும் ஓசையினிமைபெற
நோக்கியென்றவாறு.

௯௨. மூவகை யியக்கமு முறையுளிக்
கழிப்பி

(இ - ள்.) வலிவும் மெலிவும் சமனுமென்னும்
மூவகைப்பட்டசுருதியும்
நீற்குநிலைமையிலே நிறுத்தி முறையானே அத்தொழி

லைக் கழித்தென்க.

சங - ௪. திறத்து

வழிப்படூஉம்........பூங்கொடி மயங்கி

(இ - ள்.) திறங்கட்குப் பிறப்பிடமாயுள்ள
இச்சாதிப்பெரும்பண்களுட்
புறநிலைமருதப்பண்ணை வாசித்தலிலே மயங்கியென்க
அன்றி அத்திறங்களுட் புறநீர்மையென்னும்
திறத்தில் மயங்கியென்று
மாம்.

சஞ - ஏக. சண்பக மாதவி........
..கொணர்க வீங்கென

(இ - ள்.) அங்ஙனம் கண்டத்தினும்
கலத்தினுமயங்கிய மாதவியாகிய
பூங்கொடி பசந்தமேனியளாய் நறியவாளியாலே
பெரியநிலமுழுதையுமாண்ட
ஒப்பில்லாத தனிச்செங்கோலையுடைய ஒருவனாகிய காமராசனானையாலே ஒரு
முகமன்றி உலகமெல்லாம் எதிர்கொண்டு தொழுதிறைஞ்சப்படும் அவன்திரு
முகத்தைப் போகவிடக்கடவோமென்னும்
நினைவாற்பிறந்த செவ்வியையுடைய
ஊர்கிச் சண்பகமுதலியவற்றால் நெருங்கத்தொடுத்த
பூவின் மணமாறுபடும்
செவ்வியையுடைய மாலையினிடையே தொடுதத செவ்வி
எதிர்கொள்ள முதிர்ந்த
தாழைப்பூவினது முடக்கத்தையுடைய

வெள்ளியதோட்டிலே அதறகு அயல
தாகியதோர் பித்திகையினது கொழுவியமுகையாகிய
எழுத்தாணியைக் கையில்
வாங்கிக்கொண்டு
வள் உலகின்மிக்க

அதனைச்செம்பஞ்சின்குழம்பிற்றோயத்து உதறி எழுதுகின்ற
உயிர்ப்பன்மைகளைத் தாம் மகிழுந்துணையோடு புணர்விக்கும்
இனிய இளவேனிலென்பான் இளவரசன்; ஆதலால்
நெறிப்படச்செய்யான்;
அவனேயன்றியும், அந்திப்பொழுதின்கண்ணே
அரும்புகின்ற விரகவிதனத்தின்
மேலே வந்துதோன்றிய திங்களாகிய செல்வனும்
இன்றுண்டான பண்பன்றிப்
பிறப்பினும் கோட்டமுடையன்; ஆதலாற
புணர்ந்தோர் இடைப்படுப்பினும்
தணந்தோர் மறப்பினும் நறிய பூவாளியாலே
இன்பறுகருமுயிரைக்கொண்டு
விடுதல் அவற்குப் புதியதொன்றன்று; இதனை
அறிமினென்றுகொண்டு அழு

உரை சிலப்பதிகாரம்

பத்துநால்வகைக்கலைகளும் வழிபட்டுப் புகழ்ந்தொழுக
திறங்களுமாகிய அவை புறங்கூறப்படுநாவில் முற்றுத

அவற்றுட் பண்களும்
மழலைச்சொல்லோடே
அப்பாசுரத்தைப் பேசிப்பேசியெழுதி நினைவுமிகும்
மாலைக்காலத்தே வசந்த மாலையை வருகவெனவழைத்து
இம்மாலையிலெழுதிய பொருளையெல்லாம்
கோவலற்கேற்பச்சொல்லி இப்பொழுதே இங்கே
ஒன்க.

கொணர்வாயாக்வென்று தமாலம் - பச்சிலை.

கருமுகை - பித்திகை. கத்திகை - தொடைவிசேடம்.
இடைநிலம் - தொடைநடு. தாழைமுடங்கல்,
இருபெயரொட்டுமாம். யோக் கும் - போகவிடும்.
செவ்வி - மனோரதமுமாம். அலத்தகச்சேறு - செம்பஞ்சுக்
கனி.

[1] திங்கட்செல்வன் - "கால .முலகம்" என்னுஞ்சூத்திரத்துள்
திங்களென்பன உயர்திணைமேலனவாய்ப் பால்பிரிந்திசையாவெனவும்,

ஞாயிறு
"நின்றுங்
இசைத்த லிவணியல் பின்று" எனவே நின்றமுறையானே
ஈறுபெற்றுநின்று உயர்திணையாயிசைத்தல்
இவணியல்பின்றெனவுங்கூறிய ஆசிரியர், "இசைத்தலு

மூரிய வேறிடத்தான" எனக் காலமுதலாகியசொல உயர்திணையாயிசைத்தலு
மூரிய ; ஈறுதிரிந்து வாயபாடு வேறுபட்டவழி யென்றாராகலின், இதுவும் ஈறு

திரிந்து திங்கட்செல்வனென்றுயிற்றென்க. மேலும் இவ்வாறு வருவனவற்றிற்கும் இவ்விதிகொள்க. திங்களாகிய செல்வனெனப் பண்பொட்டுவிரிக்க.

செவ்வியனல்லன்: செம்மை - நடுவு நிலைமை; [2] "செவ்வியான் கேடும்" எனவும், [3] "செவ்விய ரல்லார்" எனவுங்கூறினமையின். பொழுதிடைப் படுப்பினும் - சிறிதுபொழுதை இடையே பயமின்றாகக் கழிப்பினும்; எனற்து ஊடல் நீட்டிப்பினுமென்றபடி. தணத்தல் - ஓதன் முதலியவற்றாற்சென்று குறித்துக் கூறும் பருவம் பொயத்தல். வாளியின்: இன், ஆன்; உருபுமயக்கம். நல்லுயிர் - காமவின்பத்தைத்தருகருமுயிர். இறும்பூது - புதுமை. அறிந்தீமின் - அறி மின்; பகுதிப்பொருள் விகுதி. புறங்கூறுநா - புறங்கூறுதற்குக்காரணமான நா; புறங்கூற்று - நிகரல்லார் தம்பொறாமையான் அவரில்வழி இகழ்ந்துகூறு பவாகலின் இவையுங்கூறின; இவற்றைப் பழிக்குநாவெனவுமாம். தளைவா யவிழ்ந்த - கட்டுக்குலைந்த; என்றது தன்வரைத்தன்றுதல்; என்னை? [4] "பஞ்சிறை கொண்ட பைம்பொற் கலைபுறஞ் சூழ வைத்து, நஞ்சிறை கொண்ட நாகப் படம்பழித் தகன்ற வல்குல், வெஞ்சிறைப் பள்ளி யாக விழுமுலைத் தடத்து வைகத், தஞ்சிறைப் படுக்க லாதார் தம்பரி வொழிக வென்றாள்" என்றார் பிறரும். தணிப்படுகாமம் - சிறந்தார்க்கும் உரைக்கலாவதன்றாய் அரிதாய் அகத்தே அடங்கிருக்குங்காமம. விளைதல் - முற்றுதல். மழலையின் - மழலையோடே. பட்ருறு மாலை - நினைவுமிகுமாலை; படர் - துன்பமுமாம். துணிபொருள் * மறத்தலாவ் வருந்தண்டம்; திருவாணைக்குமேலாய ஆணை இல்லையென்பதுவழக்கு. அனி

த்து - இனிமையாற்கொடுத்து ; "உணர்த்திய மண்ட மாணையி னிறைஞ்சும்"
என்ப. கத்திகையிடைநிலத்தில்யாத்த தாழைவெண்டோட்டின் எழுதியென்க.

[1] சிலப்பதிகாரம். பக். கஉக, பார்க்க. [2] திருக்குறள், கசுக.
[3] நாலடியார், புல்லறிவாண்மை, உ. [4] சீவகசிந்தாமணி, கதெகஅ.
* (பி - ம்.) 'இறத்தலால்'

அ.—வேனிற்காதை.

உ௩௭

துணிபொருளென்பதற்குத் தீர்ந்தபொருளெனினுமமையும். அளிக்கவென்றது 'அளித்துக்' கொணர்கவென்றாள், இது காமன் திருமுகமாதலானும் முன்னம் இவன்பிரிவது அறியாமையானுமெனக்கொள்க. இனி இவ்வாறன்றி அந்திப் போதகமென்பதனை யானையாக்கி அதன்புறக்கழுத்திற்றோன்றிய திங்களெனிற் பிறையாம் ; ஆகவே நாடுகாண்காதையுள் [1] "வைகறை யாமத்து, மீன்றிகழ் விசும்பின் வெண்மதி நீங்கக், காரிருணின்ற கடைநாட் கங்குல், ஊழ்வினை கடைஇ யுள்ளந் துரப்ப... ......நெடுங்கடைகழிந்து" என்பதனாற் பூருவபக்கத் துப் பதினலாம்பக்கமாதலான் அதனோடும், [2] "ஆடித் திங்கட் பேரிருட் பக்கத், தழல்சேர் குட்டத் தட்டமி ஞான்று, வெள்ளி வாரத் தொள்ளெரி யுண்ண, வுரைசான் மதுரையோ டரைசுகே டுறுமெனு, முரையு முண்டு" என்பதனோடும்

பிறவற்றோடும் மாறுகொள்ளுமாதலான் அவ்வாறுகூறுதல் பொருந்தாதென வுணர்க. இனி இவ்விழவின் முதலும் முடிவும் கடலாட்டும் புலவியும் புறப் யாடும் வதிச்செலவும்பொறையுயிர்த்திருப்பும் நிறைபதிப்புகலும் தீதுறுநாளும் ஊர்தீப்பாடும் முதனடுவிறுதியாகக் கட்டுரைகாதையுள் விரியக்கூறுவாம்; அதனுட் கண்டுகொள்க. இனி இதன்பிறப்பை இகழ்ந்துகூறுவாள், தந்ததாய ரிடத்தன்றி அலித்தன்மையதாகிய மாலையென் னும்யானையின் பிடரிற்பிறந்த செல்வனென்றாளெனினுமமையும். செவ்வியனல்லன் - புணர்ந்தார்க்கும் பிரிந் தார்க்கும் ஒருதன்மையனல்லனெனினுமமையும்.

பூங்கொடி இருக்கையளாகிச் சேர்த்தித் தழீஇ அறிந்து கட்டி நோக்கிக் கேட்டனள்; கேட்டு நோக்கி இயக்கிக்.கழிப்பி மயங்கிச் செவ்வியளாகி அளைஇக் கைக்கொண்டு எழுதிக் கூஉய அளித்துக் கொணர்க ஈங்கென்றாளென வினை முடிக்க.

எஉ - ரு. மாலை வாங்கிய.........கோவலற் களிப்ப

(இ - ள்) இங்ஙனம் மாதவிகூற அம்மாலையைவாங்கிய வசந்தமாலை போய் எண்வகைக் கூலங்கள்செறிந்த மறுகினையுடைய கோவலனைக்கண்டு அவனுக்கு அம்மாலையைக் கொடுப்பவென்க.

போயெனவும் கண்டெனவும் வருவிக்க

எசு - எ. திலகமு மளகமும்........கண்கூடு வரியும்

இனிக் குரவையும் வரியுமென்னுமிரண்டனுள், வரிகூறுவார், அதனை இவள் தொழிலாகச் சார்த்திக்கூறுகின்றார்:—

வரியாவது - அவரவர் பிறந்தநிலத்தன்மையும் பிறப்பிற்கேற்றதொழிற்றன்மையும் தோன்ற நடித்தல்; என்னை? "வரியெனப்படுவது.................வழங்கல்"[1] என்றாராகலின்.

அவ்வரி எட்டுவகைப்படும்:—கண்கூடுவரி, காண்வரி, உள்வரி, புறவரி, கிளர்வரி, தேர்ச்சிவரி, காட்சிவரி, எடுத்துக்கோள்வரியென; என்னை? "கண்கூடு.....................நெறித்தே"[2] என்பவாகலின்.

---

[1] சிலப்பதிகாரம், ௧0: ௧ - அ. [2] சிலப்பதிகாரம், உ௯: ௧௬௨ - ௯.



அவற்றுட் கண்கூடாவது பிரியதரிசனம்; அஃதாவதுகாட்சி; அஃது ஒரு

வர்கூட்டவன்றித் தானே வந்துநிற்குநிலைமை; என்னை?
"கண்கூடென்பது கரு
துங் காலை, யிசைப்ப வாராது தானே வந்து,
தலைப்பெய்து நிற்குந் தன்மைத்
தென்ப" என்றாராகலின்.
(இ-ள்.) சிலைமுதலியவற்றை உறுப்பாகக்கொண்ட
திலகமுதலியவற்றை
யுடைய மாதர்முகத்தின் மதர்த்தநோக்கத்தோடே
என்மேற் காதலையுடையாள் போற்றோன்றி முதற்கண்
எதிர்முகமாகநின்று நடித்த நடிப்பும்,
எஅ - அரு. புயல்சுமந்து..........
.காண்வரிக் கோலமும்
"காண்வரி யென்பது காணுங் காலை, வந்த பின்னர்
மனமகிழ் வுறுவன,
தந்து நீங்குந் தன்மைய தாகும்."
(இ-ள்.) புயல்சுமநதுவருந்திக் கதிரைப்பொழியும்
மதியிடத்தே கயல்க
ளுலாவித்திரிகின்ற செவ்வியோடே பாகைபபொதிந்த
பவளத்தைத்திறந்து ஒளி
யைத்தருகின்ற முத்தையொத்த நகைநலத்தைக்காட்டி
வருகவெனவந்து போக
வெனப்போகிய கரிய நெடிய கண்ணுளுடைய
காண்வரியெனனுங்கோலமும்,
இளமுத்தென்றார்,ஒளிபெறுதல்கருதி.
இளநாகினை றமுத்தெனி னுமமையும்.

அச - க.

அந்தி மாலை...............உள்வரி யாடலும்

உள்வரியென்றது - வேற்றுருக்கொண்டுநடித்தல்; என்னை? "உள்வரி யென்ப துணர்த்துங் காலை, மண்டல மாக்கள் பிறிதோ ருருவங், கொண்டுங் கொள்ளாது மாடுதற் குரித்தே" என்றாராகலின்; பாண்டவர் பிறிதுருவங் கொண்டதுவுமது. மண்டலமாக்களாவார், அரசர்.

(இ - ள்.) யான் ஊடிப் பிரிந்தகாலத்து அந்திமாலைவந்ததாகப் பிரிவாற் றுமலிரங்கி என்சிந்தைநோயமிகும் வறுமையைத் தானறிந்து கிளியொத்த கிளவியையும் மடப்பம்பொருந்திய அன்னத்தையொத்த நடையினையும் களித்த மயில்போலுஞ் சாயலினையுங்கரந்தனளாகி வேல்போன்ற கண்ணையுடைய தனது சிலதியர் கோலத்தைக்கொண்டு தான் தனிவந்து நின்றுநடித்த உள்வரியென்னு நடிப்பும்.

௬0 - ௬௫. சிலம்புவாய் புலம்பவும்.. ..... .புன்புற வரியும்

புறவரியாவது - தலைவனுடனணையாது புறத்துநின்று விளையாடுவது; என்னை? "புறவரி யென்பது புணர்க்குங் காலை, யிசைப்ப

வந்து தலைவன்முற்
படாது, புறத்துநின் றாடி விடைபெறு வதுவே''
என்றாராகலின்.
(இ - ள்.) கலங்களைப் புனையவும்பெறாத
நுசுப்பினையுடையாள் சிலம்பு
வாய்விட்டுப் புலம்பவும் மேகலை வாய்விட்டார்ப்பவும்
ஏன்றகா தலையுடையாள்
போல்வந்து நோக்கிய நோக்கோடே தன்னைப்பிரிதலால்
தன்மைதிரிந்த எனது
வறுமையையறிந்தும் என்னுடனணையாது
புறம்பேயின் றாகடித்தாடிப்பும்,
நுசுப்பினள் புலம்பவும் ஆர்ப்பவும் நோக்கமொடு
நோக்கியும் நின்றாடிய
புறவரியுமென்க.

கச - கூஉக. கோதையுங் குழலும்...கிளர்வரிக்

கோலமும்.

## அ—வேனிற்காதை.

உகூ

கிளர்வரியென்றது - நடுநின்றார் இருவருக்கும்
சந்துசொல்லக் கேட்டுநிற்
பது; என்னை? "கிளர்வரி யென்பது கிளக்குங் காலை,
யொருவ ருயப்பத்

தோன்றி யவர்வா, யிருபுற மொழிப்பொருள் கேட்டுசிற் பதுவே'' என்றாரா

கலின்.

(இ - ள்.) நன்னுதல் கோதைமுதலியன மின்னிடையைவருத்தத் தோன்றி

வந்தணுகாதே புறவாயிலேவந்துநின்று சிலதியர் வார்த்தைகேட்டு மறுமாற்றஞ்

சொல்லப் புணர்ச்சியை உட்பொதிந்திருக்கின்ற எனது புலவிச்சொல்லைக்

கேட்டு அதனை இருபுறமொழிப்பொருளாகக்கொண்டு தளர்ந்தமேனியினையும்

அழகியகூந்தலினையுமுடையாள் புலவியாற்போகின்றாள்போல நடித்துப்போன

நடிப்பும்,

இதனாற்கூறியது : யான்புணர்ச்சிநிமித்தமாகப் புலந்து தன்சிலதியர்க்குச்

சொல்லிவிட்ட மொழியைக்கேட்டு அப்படியன்றிப் புலந்துசொன்னேனாக

நடித்துப்போன நடிப்பென்றபடி.

க02உ - ஃ. பிரிந்துறை காலத்து........

.தேர்ச்சிவரி யன்றியும் தேர்ச்சிவரியென்றது - நாயகன்கிளைகட்குத் தன்றுன்பங்களைத் தேடித்

தேடிச்சொல்லுதல்; என்னை ? [''தேர்ச்சி யென்பது தெரியுங் காலைக்,] கெட்ட

மாக்கள் கிளைதண் டவர்முன, பட்டது முறறது கினைஇ

யிருந்து, தேர்ச்சியோ
டுரைப்பது தேர்ச்சிவரி யாகும்" என்றாராகலின.
(இ - ள்.) நான் பிரிந்துறைபொழுதில் தான்
பிரிவாற்றாது வருந்தின
ளாகப்பாவித்து எனது மிக்க கிளைகட்குத் தனது மிக்க
துயரத்தைத் தன்மயக்
கத்தாலே தேர்ந்துதேர்நது சொல்கின்றாளாகநடித்த
நடிப்பும்; அதுவன்றியும்,
கoூ - கூ. வண்டலர் கோதை
.........காட்சி வரியும்
காட்சிவரியென்றது - தன்வருத்ததைதப்
பலருங்காணும்படி நடித்தல் ;
என்னை ? "காட்சிவரி யென்பது கருதுங் காலைக், கெட்ட
மாக்கள் கிளைகண்
டவர்முனர்ப், பட்டது கூறிப் பரிந்துநிற பதுவே"
என்றாராகலின்.
(இ - ள்.) வண்டலர்த்துங்கோதையையுடையாள்
மாலைக்காலத்தின்கண்
ணேமயங்கிக் கண்டோரெவர்க்கும்
தன்விரகத்தைச்சொல்லிநடித்த நடிப்பும்,
கoஎ - அ. அடுத்தடுத் தவர்முன்..... .
. எடுத்துக்கோள் வரியும்
எடுத்துக்கோள்வரியென்றது - தான் கையறவெயதி
வீழ்ந்தாளாகவீழ்ந்து பிறர் எடுத்துக்கொள்ளும்படி
நடித்தல்; என்னை? "எடுத்துக் கோளை யிசைக்

ளுங் காலே, அடுத்தடுத் தழிநது மாழகி யயலவ, ரெடுத்துக்
கோள்புரிந்த தெடுத்.
துக் கோளே" என்ஞராகலின.
(இ - ள்.) அவர் முன்பு தான்
மேன்மேலுமயங்கியமயக்கத்தை அவர்
எடுத்துத்தீர்த்த எடுத்துக்கோள்வரியென்னுநடிப்பும்,
கoக - கo. ஆடன்
மகளே.........பைந்தொடி தனக்கென (இ - ள்.)
ஆயிழாய! பைந்தொடி நாடகமகளாதலான்
இங்ஙனநடித்தல்
அவட்கு இயல்பன்றேவென்றுகூறவென்க.



இவற்றூற்கூறியது: முன்பு தான் இவ்ளோடு கூடியும் ஊடியும் செல்கின்ற
காலத்து இங்ஙனநடித்தநடிப்பை நாடகவுறுப்பாகிய கண்கூடுமுதல் எடுத்துக்
கோளீருயுள்ள வரி எட்டிஞேடும் சிலேடித்துக்கூறிய
கோவலன் நாடகமக
ளிர்க்கு இந்நாடகம் பிறந்துடைமை யன்றேவெனச்
னென்பது.
சொல்லி ஓலையை மறுத்தா
கககக - ௯.

அணித்தோட்டு...............சென்றுரைப்ப

(இ - ள்.) அழகினையுடைய பொற்றோடணிந்த திருமுகத்தையுடைய ஆயிழையெழுதிய அழகிய தாழந்தோட்டுத் திருமுகத்தைக் கோவலன் மறுப்பத் தான் அதற்குவருந்தி வாடிய உள்ளத்தையுடைய வசந்தமாலை மாதவிக்கு விரைந்து சென்று உரைப்பவென்க.

அணியும் மணியும் அழகு. தோடு - பொற்றோடும், தாழந்தோடும். துனைவு- விரைவு.

கக௫ - அ. மாலை வாரா ராயினும்.........மாதவி தானென்.

துணைந்துசென்றுரைப்பவென்றதனுன் ஆற்றாளாகியதலைவியை ஆற்று

வித்தற்பொருட்டுத் தலைவனை இயற்பழித்ததோழிக்குத் தலைவி இயற்பட மொழிகின்றாளாகலின், இன்னும் இம்மாலைப்பொழுதினுள்வருவார்; வாரா ராயினும் காலைப்பொழுதில் ஈண்டு நாம் காண்போமெனச்சொன்னாள்; சொன்ன

வள் தானிருந்தமலரமளிக்கண்ணே செயலற்ற நெஞ்சத்தோடு வீழ்ந்தாள்; வீழ்ந்தவள் அமளியிசையே இமைபொருந்தாமற் கிடந்தனள்; அவள் யாரெனிற் கரிய மலர்போலும் நெடியகண்ணையுடைய மாதவி தானென்க

இனி, தான் அசையுமாம். அளிப்ப அவன் பாடுபெறறனென்றுசொல்லி மறுப்ப அதனைக்கட்டுரைத்தவளுக்குக் காண்குவமெனச்சொல்லிப் பொருந்தாது வதிந்தனளென்க. வதிதல் - தங்குதல்; பொருந்தாதுவதிதல் - தன்கொழுநனைக் கூடாதுவதிதலுமாம்

இது, நிலைமண்டில ஆசிரியப்பா.

ஊடினீ ரெல்லா .........காண்.

(இ - ள்.) உலகில் ஒருவனும் ஒருத்தியுமாயுள்ளோரில் ஊடினவர்களே! நீயிரெல்லாம் அநங்கன் திருவாணையே; கூடுமினென்று குயிற்குலங்கள் சாற்ற, இங்ஙனம்பிரிந்து சாலநீடுதலால் ஆற்முளாகி இளவேனிற்பொழுதில் நின்னோடு கலந்தாளுடைய மெல்லிய பூவிலெழுதிய திருமுகத்தை, கானலிடத்து அவன் பாடியபாட்டிறகு அலந்தோனே! காண்பாயாகவென று ஒல்லையைநீட்டினளென்க.

அ.—வேனிற்காதை முற்றிற்று.

## ஒன்பதாவது

# கனாத்திறமுரைத்த காதை.



[1] அகனக ரெல்லா மரும்பவிழ் முல்லை

[2] நிகர்மலர் நெல்லொடு தூஉய்ப்
பகன்மாய்ந்த

மாலை மணிவிளக்கங் காட்டி யிரவிற்கோர்

கோலங் கொடியிடையார் தாங்கொள்ள

மேலோர்நாண்

* மாலதி மாற்ருண் மகவுக்குப் பாலளிக்கப்
பால்விக்கிப் பாலகன் ருன்சோர மாலதியும்

பார்ப்பா னொடுமனையா ளென்மேற்
படாதனவிட்
டேற்பன கூறுமென் றேங்கி மகக்கொண்
டமரர் தருக்கோட்டம் வெள்யானைக்
கோட்டம் புகர்வெள்ளை நாகர்தங்
கோட்டம் பகல்*வாயி
லுச்சிக் கிழான்கோட்ட மூர்க்கோட்டம்
வேற்கோட்டம்
வச்சிரக் கோட்டம் புறம்பணையான்
வாழ்கோட்ட

---

உ. நிகர்மலர் - ஒளிமலர்.
உ - ௩. தூவி விளக்கேற்றியெனக.

௩ - ௪.
இரவிற்கோர்கோலம்-இராப்பொழுதைக்கு ஆம்படி
செய்தானவை
உடுத்தும் புனைந்தும் ஒப்பித்தகோலம்.

ச. (பா) மேலைநாள் - முன்னோர்நாள்.

சு. சோர - சாய.

எ. படாதன - இஸ்லாதன.

கூ. அமரர் தருக்கோட்டம் - கற்பகம் நிற்குங்கோயில்; சாந்திகரைக் கோட்டமெனினுமாம்.

கo. வெள்ளைநாகர் - பலதேவர். பகல்வாயில் - பகற்றோற்றுகிறவாயில்; கீழ்த்திசை.

கo - கக உச்சிக்கிழான் - சூரியன்; அன்றி, பகல்வாயில் உச்சிக்கிழான்- பகற்பொழுதுக்குவழியான உச்சிக்கிழானென்றுமாம். ஊர்க்கோட்டம் - ஸ்ரீகை லாயம் நிற்கும்கோயில். வேற்கோட்டம் - முருகன்கோயில்.

கஉ. வச்சிரக்கோட்டம் - வச்சிராயுதமிருக்கிறகோயில். புறம்பணையான்- மாசாத்தன்; புறம்பு அணைந்தவிடம் புறம்பணையாயிற்று.

---

[1] க - உ: முல்லை. அ - கo. [2] இ - கக: சிலப். கo: எஅ - அஎ. [3] சிலப். 'கூ: சக. (பி - ம்.) * 'வாயிலுச்சி'

[1] நிக்கந்தக் கோட்ட நிலாக்கோட்டம் புக்கெங்குந்
தேவிர்கா ளெம்முறுநோய் * தீர்மென்று மேவியோர்
௧௫ பாசண்டச சாத்தற்குப் பாடு கிடந்தாளுக்
கேசும் படியோ ரிளங்கொடியா † யாசிலாய்
[2] செய்தவ மில்லோர்க்குத் தேவர் வரங்கொடார்
பொய்யுரையே யன்று பொருளுரையே கையிற்
படுபிணந்தா வென்று பறித்தவள்கைக் கொண்டு
௨௦ சுடுகாட்டுக் கோட்டத்துத் தூங்கிருளிற் சென்றாங்

